ஒழுங்கான, சீரான அமைப்பைப் பெற்றுள்ளன. இம் மூலக் கூறுகள் தங்களின் சமநிலைத் தானங்களில் அதிர்வடைகின்றன. வாயுக்களைப்போல் நீர்மங்களையும், திண்மப்பொருள்களையும் அழுத்திச் சுருக்க முடியாது.

### திண்மங்கள்

திண்மங்களைக் கீழ்க்கண்ட இரு வகைகளாகப் பிரிக்கலாம் : (a) படிகவடிவமுடைய பொருள்கள், (b) படிகவடிவமற்ற பொருள்கள். படிகப் பொருளில் (crystalline) மூலக்கூறுகள் ஒரு சீரான முறையில் நெருங்கி அடர்ந்துள்ளன. எனவே, குறிப்பிட்ட உருவ அமைப்புடன் விளங்குகிறது. படிகப்பொருள் குறிப்பிட்ட உருகுநிலையையும் பெற்றுள்ளது. சோடியம் குளோரைடு, அயோடின், சர்க்கரை போன்ற சேர்மங்கள் படிக வடிவமுள்ள திண்மங்களுக்கு உதாரணங்களாகும். படிக உருவமற்ற திண்மங்கள் குறிப்பிட்ட உருவ அமைப்புடன் இருப்பதில்லை. அவற்றை மிகையாகக் குளிர்விக்கப்பட்ட நீர்மங்கள் எனக் கருதலாம். கண்ணாடி, களிக்கந்தகம் ஆகியவை இவ்வகைத் திண்மத்திற்குச் சான்றாகும். இவை ஒரு குறிப்பிட்ட வெப்ப நிலையில் உருகுவதில்லை. இவற்றின் மூலக்கூறுகள் சீரான முறையில் அமைக்கப்படவில்லை. சில சமயங்களில் படிக உருவ மற்ற பொருள்கள் படிகப் பொருள்களாக மாறுகின்றன.

குறிப்பிட்ட வடிவத்தைப் பெற்றிருப்பதுடன், ஒளி விலகல் எண், வெப்பம், மின்சாரம் ஆகியவற்றைக் கடத்தும் திறன் இவற்றிலும் படிகங்கள், நீர்மங்கள், வாயுக்கள் இவற்றிலிருந்து மாறுபட்டு விளங்குகின்றன. படிகமாகும் சூழ்நிலைகளைப் பொறுத்து ஒரு பொருள் பல வடிவங்களில் படிகமாகும் தன்மையைப் பெற்றுள்ளது.

### உருகுநிலை

திண்மநிலையில், அயனிகள், அணுக்கள் அல்லது மூலக் கூறுகள் நிலையான இடங்களில் அமையப்பெற்றுள்ளன. ஒரு திண்மப் பொருளைச் சூடுபடுத்தினால், இவற்றிலுள்ள மூலக்கூறு கள் அதிகமாக அதிர்வடைகின்றன. ஆனால், இவற்றின் சமநிலை இடங்களிலிருந்து மூலக்கூறுகள் அதிகமாக நகர்வதில்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் மூலக்கூறுகள் அதிகமாகக் கிளர்வுற்று அவற்றின் சமநிலை இடங்களிலிருந்து நகர்ந்து ஒன்றன்மேல் ஒன்று அமைகின்றன. இம்முறையில் திண்மங்களின் கன அளவு மாறுவதில்லை. இந்த வெப்பநிலை திண்மப்பொருளின் உருகுநிலை எனப்படும். உருகுநிலையில்

3

திண்மப்பொருளும் நீர்மமும் சமநிலையில் உள்ளன. திண்மம் முழுவதும் உருகுவதில்லை. நீர்மமும் முழுவதும் உறைவதில்லை. இந்த வெப்பநிலைக்குமேல் திண்மம் முழுவதும் உருகிய நிலையிலும், இதற்குக் குறைந்த வெப்பநிலையில் நீர்மம் உறைந்த நிலையிலும் இருக்கிறது.

**உறைநிலை (Freezing point)**

எந்த வெப்பநிலையில் ஒரு பொருளின் திண்மமும் நீர்மமும் சமநிலையில் இருக்கிறதோ அந்த வெப்பநிலையை 'உறைநிலை' என்கிறோம். அழுத்தம் நிலையாக இருக்கும்போது ஒவ்வொரு பொருளும் ஒரு குறிப்பிட்ட உறைநிலையைப் பெற்றிருக்கும். தூய நீர்மங்கள் குளிர்ச்சியினால் திண்மமாக மாறுதலைப் படிகமாதல் என்கிறோம். படிகமாதல் நிகழத் தொடங்கும்போது வெப்பம் வெளிவிடப்படுகிறது. இந்த வெப்பத்தைப் படிகமாதல் வெப்பம்(heat of crystallisation) என்பர். இது ஒரு மோல் நீர்மம், திண்மமாக மாறும்போது வெளியாகும் வெப்பமாகும். இதை $\Delta$ Hc எனக் குறிக்கிறோம். இது திண்ம நீர்ம நிலைகளில் பொருள் பெற்றிருக்கும் வெப்பநிலைக்கு இடையே உள்ள வித்தியாசத்திற்குச் சமமாகும்.

**நீர்மத்தின் ஆவியழுத்தமும் கொதிநிலையும்**

ஒரு திறந்த பாத்திரத்தில் நீர்மம் ஒன்றை வைத்தால், அது ஓரளவிற்கு ஆவியாகி நீர்மட்டத்திற்கு மேலே அழுத்தத்தை உண்டாக்கும். இந்த அழுத்தம் நீர்மத்தின் வெப்பநிலையைப் பொறுத்து மாறும். நீர்மத்தின் மேற்பரப்பில் இருக்கும் மூலக்கூறுகளை நீர்மத்தின் உட்பக்கத்தை நோக்கி இழுக்கும் விசைகள் மேற்பரப்பில் அமைந்துள்ளன. நீர்மநிலையில் எல்லா மூலக்கூறுகளும் ஒரே வேகத்துடன் நகருவதில்லை. இவை வெவ்வேறு வேகங்களைப் பெற்றிருக்கின்றன. இவற்றின் சராசரி வேகத்தைக் காட்டிலும் அதிக வேகத்தைப் பெற்றுள்ள மூலக்கூறுகள், நீர்மத்தின் மேற்பரப்பில் ஏற்படும் விசைகளை முறியடித்து, நீர்மத்துக்கு வெளியே தப்பிச் செல்கின்றன. இம் முறைக்கு ஆவியாதல் என்று பெயர். ஆவி நிலைமையிலுள்ள மூலக்கூறுகளின் எண்ணிக்கை அதிகரித்தால், சில மூலக்கூறுகள் நீர்மத்தை வந்தடைந்து சுருங்குகின்றன. மூடிய பாத்திரத்தில் நீர்மத்தை எடுத்துக்கொண்டால், ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் நீர்மத்தின் பரப்பிலிருந்து வெளியேறும் மூலக்கூறுகளுக்கும் வந்தடைந்து சுருங்கும் மூலக்கூறுகளுக்குமிடையே ஒரு சமநிலை உண்டாகிறது. அதாவது நீர்மத்தின் மேற்பரப்பிலிருந்து வெளியேறும் மூலக்கூறுகளும் வந்தடையும்

மூலக்கூறுகளும், சமமாக உள்ளன. மேற்பரப்பில் உள்ள ஆவி வாயுவைப்போல் அழுத்தத்தை உண்டாக்குகிறது. இவ்வழுத்தத்திற்குக் குறிப்பிட்ட வெப்பநிலையில் நீர்மத்தின் ஆவியழுத்தம் என்று பெயர்.

ஒரு நீர்மத்தின் ஆவியழுத்தம் வெப்பநிலை அதிகரிப்புடன் கூடுகிறது. வெப்பநிலை அதிகரிக்கும்போது அதிகமான மூலக்கூறுகள் ஆவி நிலைமையை (vapour pressure) அடைகின்றன. இதனால் ஆவியழுத்தம் அதிகரிக்கிறது. ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் நீர்மத்தின் ஆவியழுத்தமும், வெளிக்காற்றின் அழுத்தமும் சமமாகிறது. இந்த வெப்பநிலையில் நீர்மம் கொதித்து. கொப்புளங்கள் நீர்மத்தின் பரப்பை நோக்கி எழுகின்றன. இவ் வெப்பநிலை நீர்மத்தின் கொதிநிலை எனப்படுகிறது.

760 மி.மீ. அல்லது ஒரு வளிமண்டல அழுத்தத்திற்கு ஒரு நீர்மத்தின் ஆவியழுத்தம் எந்த வெப்பநிலையில் சமமாகிறதோ, அவ் வெப்பநிலை திரவத்தின் இட்டக் கொதிநிலை எனப்படும். 100°C வெப்பநிலையில் நீரின் ஆவியழுத்தம் 760 மி.மீ. ஆல்கஹாலின் கொதிநிலையான 78°C-ல் அதன் ஆவியழுத்தம் 760 மி.மீ. ஒரு நீர்மத்தின் ஆவி அழுத்தத்தைக் குறைத்தால், நீர்மங்கள் (தங்களுடைய கொதிநிலையைக் காட்டிலும்) குறைந்த வெப்பநிலையில் கொதிக்கின்றன. சான்றாக நீரின் ஆவியழுத்தம் 355 மி.மீ ஆக இருக்கும்போது அது குறைந்த வெப்பநிலையான 80°C ல் கொதிக்கிறது. அழுத்தத்தை அதிகரித்தால் நீர் 100°C-க்கு உயர்ந்த வெப்பநிலையில் கொதிக்கிறது.

ஒரு நீர்மம் ஆவியாகும்பொழுது, அதிக இயக்க ஆற்றலைப் பெற்ற மூலக்கூறுகள் வெளியேறுகின்றன. இதனால் நீர்மத்தில் உள்ள மூலக்கூறுகளின் சராசரி இயக்க ஆற்றல் குறைந்து, நீர்மத்தின் வெப்பநிலையும் குறைகிறது.

ஒரு நீர்மத்தை உறைநிலைக்கும், நிலைமாறு வெப்பநிலைக்கும் (critial temperature) இடையே எந்த வெப்பநிலையில் வேண்டுமானாலும் கொதிக்கவைக்கலாம். அதற்காக நீர்மத்தின்மீது உள்ள வெளி அழுத்தத்தைக் குறைக்கவேண்டும்; அல்லது அழுத்தத்தை அதிகரிக்கலாம். அழுத்தத்தில் நிகழும் மாறுபாட்டால், கொதிநிலையில் உண்டாகும் மாறுபாட்டைக் காட்ட கிளாஸியர் கிளேப்ரான் சமன்பாட்டைப் பயன்படுத்தலாம்.

$$\frac{\Delta T}{\Delta P} = \frac{RT^2}{\Delta HrP}$$

இங்கு $\frac{\Delta T}{\Delta P}$ = அழுத்த மாறுபாட்டுடன் கொதிநிலை மாறுபாடு.

$R$ = வாயு மாறிலி ; $T$ = தனி அளவையில் கொதிநிலை.

$\Delta Hr$ = மோலார் ஆவியாதல் வெப்பம்.

$P$ = அழுத்தம்.

**ட்ரௌடன் விதி** (Trouton's Rule)

மோலார் ஆவியாதல் வெப்பத்திற்கும் நீர்மத்தின் கொதி நிலைக்கும் உள்ள விகிதம் ஒரு மாறிலியாகும். இம் மாறிலி எல்லா இயல்பான நீர்மங்களுக்கும் ஒன்றாகவே உள்ளது.

$$\frac{\Delta Hr}{T} = \text{மாறிலி} = 21 \left( \begin{array}{r} T - \text{தனிவெப்பநிலை அலகில்} \\ \text{நீர்மத்தின் கொதிநிலை} \end{array} \right)$$

மீத்தேன், ஹெக்சேன் போன்ற இயல்பான நீர்மங்களுக்கு இவ் விதி சரியாக உள்ளது. ஆனால், மூலக்கூறு இணை நீர்மங்களான நீர், ஆல்கஹால் ஆகியவற்றிற்கு இம் மாறிலியின் மதிப்பு அதிகமாக உள்ளது (நீர் = 26 ; ஆல்கஹால் = 26·7). ஃபார்மிக் அமிலம், அசிடிக் அமிலம் ஆகியவை குறைந்த மதிப்பைப் (14·8) பெற்றுள்ளன.

நீரின் கொதிநிலையான 100°C, வெப்பப்படுத்துதல் தொடர்ந்து நடைபெற்றாலும், ஒரு மாறிலியாகவே உள்ளது. இதற்குக் காரணம், அளிக்கப்பட்ட வெப்பம். மூலக்கூறு களின் இயக்க ஆற்றலை அதிகரிக்கப் பயன்படுகிறது. இதனால் அதிக மூலக்கூறுகள் ஆவி நிலையை அடைகின்றன. நீர்மம் முழுவதும் ஆவியாகும் வரை இந் நிகழ்ச்சி நடை பெறுகிறது.

ஒரு கிராம் நீர்மத்தை அதன் கொதிநிலையில் ஆவியாக்கு வதற்குத் தேவையான வெப்பத்தினளவு நீர்மத்தின் ஆவி யாதலின் உள்ளுறை வெப்பம் (latent heat of vapourisation) எனப்படுகிறது.

## வினாக்கள்

1. கீழ்க்கண்டவற்றை விளக்குக :

   (1) உருகுநிலை ; (2) கொதிநிலை ; (3) ஆவியழுத்தம் ; (4) ஆவியழுத்தத்திற்கும் வெப்பநிலைக்குமுள்ள தொடர்பு.

2. நீர் 50°C-ல் கொதிக்க முடியுமா ? விளக்குக.

3. அயனிப் பிணைப்புக்கொண்ட சேர்மங்கள் அதிக உருகு நிலையைக் கொண்டுள்ளன ; சமவலுப் பிணைப்புக்கொண்ட சேர்மங்கள் குறைந்த உருகுநிலையைக் கொண்டுள்ளன. காரணம் கூறுக.

4. நீர்மங்களுக்கும் திண்மங்களுக்கும் உள்ள வேறுபாட்டை வரையறுக்கவும்.

# 6. கரைசல்கள்

**கரைசல்களின் அடர்வை வரையறுக்கும் முறைகள்**

ஒரு கரைசலில் கரைந்துள்ள கரைபொருள், கரைப்பான் ஆகியவற்றின் அளவுகளைக் கூறுவது கரைசலின் அடர்வு எனப் படுகிறது. நீர்த்த அல்லது அடர்கரைசல் என்பதிலிருந்து இந்த அளவுகளைக் காணலாம். நீர்த்த கரைசலில், கரைப்பானின் அளவோடு ஒப்பிடும்போது மிகக் குறைந்த அளவு கரைபொருள் கரைந்திருக்கிறது. நீர்த்த கரைசல்தான் பல விதிகளுக்கு உட்படுகிறது. கரைப்பானின் அளவோடு ஒப்பிடும்போது அதிக அளவு கரைபொருளைக் கொண்டுள்ள கரைசல் அடர்கரைசல் எனப்படுகிறது. இவ்வாறு வரையறுக்கப்பட்ட எல்லா விளக்கங்களும் கரைசல்களின் பண்பை ஒட்டியே கொடுக்கப் பட்டுள்ளன. கரைபொருளின் எடையைச் சரியாகக் கண்டறி வதற்கு வேறு முறைகளைக் கையாளவேண்டும். வேதியியலில் கரைசல்களின் அடர்வுகளைக் குறிப்பதற்குப் பல அலகுகள் வரையறுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

(1) சதவீத அடர்வு (Percentage concentration)

100 கிராம் கரைசலிலுள்ள கரைபொருளின் எடையை கிராமில் காட்டும் அலகு சதவீத அடர்வு எனப்படும். எனவே, 20% சர்க்கரைக் கரைசலில் 20 கிராம் சர்க்கரையும், 80 கிராம் நீரும் கலந்து 100 கிராம் கரைசலைக் கொடுக்கிறது. 0·8% சோடியம் குளோரைடு கரைசல், 0·8 கிராம் உப்பை 99·2 கிராம் நீரில் கரைத்துப் பெறப்படுகிறது. உதாரணம்: 40 கிராம் நீரில் 10 கிராம் சோடியம் குளோரைடைக் கரைத்துப் பெறப்படும் கரைசலின் சதவீத அடர்வைக் கணக்கிடுக.

கரைசலின் மொத்த எடை = கரைபொருளின் எடை + கரைப்பானின் எடை.

$= 10 + 40 = 50$ கிராம்.

50 கிராம் கரைசலில் உள்ள சோடியம் குளோரைடின் எடை = 10 கி.

$\therefore$ கரைசலின் 100 கிராமில் உள்ள சோடியம் குளோரைடின் எடை $= \frac{10}{50} \times 100$

= 20 கி.

$\therefore$ கரைசலின் சதவீத அடர்வு = 20.

(2) நார்மாலிட்டி அலகு (Normality Unit) (N)

ஒரு லிட்டர் கரைசலிலுள்ள கரைபொருளின் கிராம் சமான எடைகளின் எண்கள் அக் கரைசலின் நார்மாலிட்டி எனப் படுகிறது.

$$\text{நார்மாலிட்டி } (N) = \frac{\text{ஒரு லிட்டர் கரைசலிலுள்ள கரைபொருளின் எடை (கிராமில்)}}{\text{கரைபொருளின் சமான எடை}}$$

நார்மாலிட்டியை $N$ என்ற எழுத்தால் குறிக்கிறோம். ஒரு லிட்டர் கரைசலில் ஒரு கிராம் சமான எடை அளவுள்ள கரை பொருள் இருந்தால் அக் கரைசலின் திறன் $1N$ ஆகும். அக் கரைசலில் 2 கிராம் சமான எடை அளவுள்ள கரைபொருள் கரைந்திருந்தால் அதன் திறன் $2N$ எனப்படும்.

கணக்கு 1

$0.12N$ திறனுள்ள கரைசலின் 250 c.c-யிலுள்ள சல்ஃபூரிக் அமிலத்தின் எடையைக் கணக்கிடுக?

சல்ஃபூரிக் அமிலத்தின் சமான எடை எண் = அதன் மூலக் கூறு எடை/2

= 98/2 = 49.

$1N$ கரைசலின் 1 லிட்டரில் கரைந்துள்ள $H_2SO_4$-ன் எடை = 49 கி.

$0.12N$ கரைசலின் 1 லிட்டரில் கரைந்துள்ள $H_2SO_4$-ன் எடை = $(49 \times 0{\cdot}12)$ கி.

250 c-c-ல் கரைந்துள்ள $H_2SO_4$-ன் எடை $= \frac{49 \times 0{\cdot}12 \times 250}{1000}$

= $1{\cdot}47$ கிராம்

**கணக்கு 2**

250 c.c கரைசலில் 11·2 கிராம் கரைந்துள்ள பொட்டாசியம் ஹைடிராக்சைடைப் பெற்றிருக்கும் கரைசலின் திறனைக் கண்டுபிடி.

$$\left.\begin{array}{r}\text{பொட்டாசியம் ஹைடிராக்சைடின்}\\ \text{சமான எடை எண்}\end{array}\right\} = \frac{39 + 16 + 1}{1}$$

$$= 56$$

$$\left.\begin{array}{r}\text{56 கிராம் பொட்டாசியம் ஹைடிராக்சைடு 1000 c.c}\\ \text{-யில் கரைந்திருக்கும்போது கரைசலின் திறன்}\end{array}\right\} = 1N$$

$$\left.\begin{array}{l}\text{11·2 கிராம் பொட்டாசியம் ஹைடிராக்சைடு}\\ \text{1000 c.c-ல் கரைந்திருக்கும் கரைசலின் திறன்}\end{array}\right\} = \frac{11 \cdot 2}{56} N$$

$$\left.\begin{array}{l}\text{11.2 கிராம் பொட்டாசியம் ஹைடிராக்சைடு}\\ \text{250 c.c-ல் கரைந்திருக்கும் கரைசலின் திறன்}\end{array}\right\} = \left[\frac{11 \cdot 2}{56} \times \frac{250}{1000}\right]$$

$$= 0.8N$$

## (3) மோலாரிட்டி அலகு (Molarity Unit) (M)

அடர்வுகளைக் காட்டுவதற்கு இதுதான் சாதாரணமாகப் பயன்படும் அலகு. ஒரு லிட்டர் கரைசலில் கரைந்துள்ள கிராம் மோல்களின் எண்ணுக்கு மொலாரிட்டி அலகு எனப் பெயர்.

இதை 'M' என்ற குறியால் குறிப்பது வழக்கம். ஒரு கரை பொருளின் மொத்த மோல் எண்களைக் கீழ்க்கண்ட விதித்தின் மூலம் கணக்கிடலாம்.

$$\text{கரைபொருளின் மோல் எண்} = \frac{\text{கரைபொருளின் எடை}}{\text{அதன் மூலக்கூறு எடை எண்}}$$

ஒரு லிட்டர் கரைசலில் ஒரு மோல் (1 கிராம் மூலக்கூறு எடை) கரைபொருளைப் பெற்றிருக்கும் கரைசலின் திறன் 1 M ஆகும். கரைசல் இரண்டு கிராம் மூலக்கூறு எடை அளவுள்ள கரைபொருளைப் பெற்றிருப்பதால் அதன் திறன் 2M ஆகும். ஒரு பொருளின் மூலக்கூறு எடையும், சமான எடையும் சமமாக இருந்தால் மொலாரிட்டியும், நார்மாலிட்டியும் சமமாக இருக்கும்.

**கணக்கு**

46·07 மூலக்கூறு எடை பெற்றுள்ள எத்தில் ஆல்கஹாலின் ($CH_3CH_2OH$) 50 கிராம் எடை 500 c.c-ல் கரைந்துள்ள நீர்க் கரைசலின் மொலாரிட்டியைக் கணக்கிடுக.

$$\text{கரைபொருளின் மோல் எண்கள்} = \frac{\text{கரைபொருளின் எடை}}{\text{அதன் மூலக்கூறு எடை}}$$

$$= \frac{50}{46{\cdot}07} = 1{\cdot}09 \text{ மோல்கள்.}$$

500 c.c கரைசல் 1·09 மோல்கள் எத்தில் ஆல்கஹாலைப் பெற்றுள்ளது.

$$\text{1000 c.c கரைசலில் உள்ள மோல்கள்} = \frac{1{\cdot}09}{500} \times 1000$$

$$= 2{\cdot}18$$

$$\text{மொலாரிட்டி} = 2{\cdot}18M.$$

(4) மொலாலிட்டி அலகு (Molality Unit) (m)

இம் முறையில் அடர்வைக் குறிப்பது எளிதாக உள்ளது. 1000கிராம் கரைப்பானில் கரையும் கரைபொருளின் மோல் எண்களுக்கு மொலாலிட்டி என்று பெயர். இதை '*m*' என்ற குறியால் குறிப்பது வழக்கம்.

$$\text{மொலாலிட்டி } (m) = \frac{\text{கரைபொருளின் மோல் எண்கள்} \times 1000}{\text{கரைப்பானின் எடை}}$$

கரைபொருளின் மூலக்கூறு எடையைக் கண்டுபிடிக்க இவ்வலகு உதவுகிறது. கரைசல்களின் கொதிநிலைகளையும், உறைநிலைகளையும் கணக்கிடுவதற்கு மொலாலிட்டி அலகு நன்கு பயன்படுகிறது.

**கணக்கு 1**

3·7 கிராம் பொட்டாசியம் குளோரைடு (KCl-ன் மூலக்கூறு எடை = 74·5) 500 கிராம் நீரில் கரைந்திருக்கும் கரைசலின் மொலாலிட்டியைக் கணக்கிடுக.

$$\text{கரைபொருளின் மோல் எண்கள்} = \frac{\text{கரைபொருளின் எடை}}{\text{கரைபொருளின் மூலக்கூறு எடை}}$$

$$= \frac{3{\cdot}7}{74{\cdot}5} = 0{\cdot}048 \text{ மோல்}$$

$$\text{மொலாலிட்டி} = \frac{\text{கரைபொருளின் மோல் எண்}}{\text{கரைப்பானின் எடை}} \times 1000$$

$$= \frac{0{\cdot}048}{500} \times 1000 \quad = 00{\cdot}96 \; m.$$

கரைசலின் மொலாலிட்டி $= 0{\cdot}096 \; m.$

கணக்கு

1 மொலால் ஆக்சாலிக் அமிலக் கரைசலின் சதவீத அடர்வைக் கணக்கிடுக.

ஆக்சாலிக் அமிலத்தின் மூலக்கூறு எடை $= 126$

1000கி. நீரில் கரைந்திருக்கும் 1 மொலால் கரைசலிலுள்ள ஆக்சாலிக் அமிலத்தின் எடை $\}$ = 126கி.

$$\therefore \text{சதவீத அடர்வு} = \frac{126}{(1000 + 126)} \times 100$$

$$= 11{\cdot}2$$

(5) மோல் பின்ன அலகு (Mole Fraction Unit)

ஒரு கரைசலிலுள்ள ஒரு பொருளின் மோல் பின்னம், அப்பொருளின் மோல் எண்களைக் கரைசலிலுள்ள பொருள்களின் மொத்த மோல் எண்களால் வகுத்துவரும் ஈவு எனக் கருதப்படுகிறது. ஒரு கரைசலில் கரைபொருள், கரைப்பான் என்ற இருவகைப் பொருள்களே உள்ளன.

கரைசலில் கரைபொருளின் மோல் பின்னம்

$$= \frac{\text{கரைபொருளின் மோல்களின் எண்ணிக்கை}}{\text{கரைபொருளின் மோல்கள்} + \text{கரைப்பானின் மோல்கள்}}$$

கரைபொருளின் மோல் எண்களை $n_2$ எனவும், கரைப்பானின் மோல்களை $n_1$ எனவும் குறித்தால்,

கரைபொருளின் மோல் பின்னம் $= X_2$

$$= \frac{n_2}{n_2 + n_1}$$

கரைப்பானின் மோல்பின்னம் = $\dfrac{\text{கரைப்பானின் மோல்கள்}}{\text{கரைபொருளின் மோல்கள்} + \text{கரைப்பானின் மோல் எண்கள்}}$

$$X_1 = \frac{n_1}{n_2 + n_1}$$

$X_1$, $X_2$ ஆகியவை கரைப்பான், கரைபொருள் ஆகியவற்றின் மோல் பின்னங்களாகும். ஒரு கரைசலிலுள்ள எல்லாப் பொருள்களின் மோல் பின்னங்களின் கூட்டுத்தொகை 1 ஆகும்.

$$X_1 + X_2 = \frac{n_1}{n_1 + n_2} + \frac{n_2}{n_1 + n_2} = \frac{n_1 + n_2}{n_1 + n_2} = 1$$

கரைசலின் அடர்வைச் சார்ந்த குணத்திற்கும், கரைபொருள், கரைப்பான் ஒன்றையொன்று தழுவிய மூலக்கூறெண்களுக்கும் உள்ள தொடர்பைக் குறிப்பதற்கு மோல் பின்ன அலகு பயன்படுகிறது.

**கணக்கு 1**

92 கிராம் எத்தில் ஆல்கஹால் ($C_2H_5OH$—மூலக்கூறு எடை = 46) 144 கிராம் நீரில் கரைந்திருக்கிறது. எத்தில் ஆல்கஹால் கரைசலின் மோல் பின்னத்தைக் கணக்கிடுக.

கரைபொருளின் மோல் எண்கள் = $\dfrac{92 \text{ கி. } (C_2H_5OH\text{-ன் எடை})}{46 \text{ கி. } (C_2H_5OH\text{-ன் மூலக்கூறு எடை})}$

= 2 மோல்கள்

கரைப்பானின் மோல் எண்கள் = $\dfrac{144 \text{ கி. (நீரின் எடை)}}{18 \text{கி. (நீரின் மூலக்கூறு எடை)}}$

= 8 மோல்கள்

∴ கரைபொருளின் மோல் பின்னம் $= \frac{2}{2+8} = \frac{2}{10}$

$= 0{\cdot}2$

கணக்கு 2

வடித்துப் பகுத்த சாராயத்தில் 95% எத்தனல் எடை அளவில் உள்ளது. அதிலுள்ள பகுதிப் பொருள்களின் மோல் பின்னங்களைக் கண்டுபிடி.

100 கிராம் வடித்துப் பகுத்த சாராயத்தில் 95 கிராம் $C_2H_5OH$, 5 கிராம் நீரும் உள்ளன.

எத்தில் ஆல்கஹாலின் மூலக்கூறு எடை $= 46$

எத்தில் ஆல்கஹாலின் மோல் எண் $= \frac{95}{46}$

$= 2{\cdot}065$ மோல்கள்

நீரின் மூலக்கூறு எடை $= 18$

நீரின் மோல் எண் $= \frac{5}{18} = 0{\cdot}278$ மோல்

கரைசலின் மொத்த மோல் எண்கள் $= 2{\cdot}065 + 0{\cdot}278$

$= 2{\cdot}343$

எத்தில் ஆல்கஹாலின் மோல் பின்னம் $X_2 \frac{2{\cdot}065}{2{\cdot}343} = \underline{0{\cdot}882}$

நீரின் மோல் பின்னம் $X_1 = \frac{0{\cdot}278}{2{\cdot}343} = \underline{0{\cdot}118}$

கீழ்க்கண்ட அட்டவணை பல்வேறு அலகுகளைக் காட்டுகிறது

| பெயர் | விளக்கம் | அடர்வின் அலகு | எடை அல்லது கன அளவு |
|---|---|---|---|
| சதவீத அடர்வு | 100கி. கரைசலில் உள்ள கரைபொருளின் எடை (கிராமில்) | கரைபொருளின் எடை கி. / 100கி. கரைசல் | கரைசலின் எடை |
| மொலாரிட்டி | 1லிட்டர் கரைசலில் உள்ள கரைபொருளின் மோல் எண்கள் | கரைபொருளின் மோல் எண்கள் / 1 லிட்டர் கரைசல் | கரைசலின் கன அளவு |
| மொலாலிட்டி | 1000கி. கரைப்பானில் உள்ள கரைபொருளின் மோல் எண்கள் | கரைபொருளின் மோல் எண்கள் / 1000கி. கரைப்பான் | கரைப்பானின் எடை |
| நார்மாலிட்டி | 1லிட்டர் கரைசலிலுள்ள கரைபொருளின் சமான எடை எண்கள் | கரைபொருளின் சமான எடை எண்கள் / 1 லிட்டர் கரைசல் | கரைசலின கன அளவு |
| மோல் பின்னம் | கரைசலின் ஒருகூறின் மோலுக்கும்மொத்த மோலுக்குமுள்ள விகிதம் | பகுதிப் பொருளின் மோல் எண் / மொத்த மோல்கள் | மோல்களின் விகிதம் |

## நீர்த்த கரைசல்கள்
## (Dilute Solutions)

கரைப்பானின் எடையுடன் ஒப்பிடும்போது மிகக் குறைந்த அளவு கரைபொருள் கரைந்திருக்கும் கரைசல் நீர்த்த கரைசல் எனப்படும். சான்றாக 2 கிராம் சோடியம் குளோரைடு 1 லிட்டர் நீரில் கரைந்துள்ள கரைசல் நீர்த்த கரைசலாகும். நீர்த்த

கரைசல்களின் பண்புகள், அவற்றில் கரைந்துள்ள கரை பொருளின் தன்மையைப் பொறுத்ததன்று. ஆனால், கரைசலின் அடர்வைப் பொறுத்திருக்கும். அதாவது கரைசலில் உள்ள அயனிகள் அல்லது மூலக்கூறுகளின் எண்ணிக்கையைச் சார்ந் திருக்கும். இவ்வாறு அடர்வைப் பொறுத்து மாறும் நீர்த்த கரைசல்களின் பண்புகள் **தொகைசார் பண்புகள்** (colligative properties) எனப்படும். இவை நான்கு வகைப்படும். அவை : கரைப்பானின்,

(1) ஆவியழுத்தக் குறைவு (Lowering of vapour pressure)

(2) கொதிநிலை உயர்வு (Elevation of boiling point)

(3) உறைநிலைத் தாழ்வு (Depression of freezing point)

(4) கரைசலின் ஊடு பரவலழுத்தம் (Osmotic pressure)

**கரைப்பானின் ஆவி அழுத்தக் குறைவு**

ஒவ்வொரு நீர்மத்திலுள்ள மூலக்கூறுகளும் ஆவி நிலைமைக்கு விரவிச் செல்லும் தன்மை பெற்றிருப்பதால், ஒவ் வொரு நீர்மத்திற்கும் குறிப்பிட்ட ஆவி அழுத்தம் உண்டு. இந்த ஆவி அழுத்தம் ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் நிலையாக உள்ளது. ஒரு நீர்மக் கரைப்பானில், ஆவியாகும் தன்மை பெற்றிராத கரைபொருளைக் (சர்க்கரை) கரைத்தால் கரைப் பானின் ஆவியழுத்தம் குறையும். இதற்குக் காரணம், கரை பொருளைச் சேர்த்தவுடன், கரைப்பானின் அடர்வு, அது தூய நிலையில் பெற்றிருந்ததைவிடக் குறைகிறது. இதனால் வெளிவரும் கரைப்பான் மூலக்கூறுகள், தூயநிலையி லிருந்ததைவிடக் குறைந்துவிடுகின்றன. எனவே, தூய கரைப்பானின் ஆவி அழுத்தத்தைவிடக் குறைந்த ஆவி அழுத்தக் கரைசல் பெறு கிறது. இப் பண்புக்குக் கரைப்பானின் ஆவியழுத்தக் குறைவு எனப் பெயர்.

ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் கரைப்பானின் ஆவி அழுத் தம் $P^0$ ஆகவும், அதே வெப்பநிலையில் கரைசலின் ஆவி அழுத் தம் $P$ ஆகவும் இருந்தால், $(P^0-P)$ ஆவி அழுத்தக் குறைவைக் காட்டுகிறது. இதைத் தூய கரைப்பானின் ஆவி அழுத்தமான $P^0$ ஆல் வகுத்தால், கிடைக்கும் ஈவு $= P^0-P/P^0$ ஆகும். இந்த ஈவுக்கு எடுத்துக்கொண்ட கரைசலின் ஒப்பு ஆவி அழுத்தக் குறைவு (Relative lowering of vapour pressure) எனப் பெயர். ஆவியழுத்தக் குறைவு கரைபொருளின் மூலக்கூறு அடர்வைச்

சார்ந்திருக்கிறது. 1887-ல் ரௌல்ட் என்பவர் தழுவிய ஆவி யழுத்தக் குறைவையும், கரைசலின் அடர்வையும் இணைத்து ஒரு விதியை வெளியிட்டார். அது ரௌல்ட் விதி எனப்படும்.

ரௌல்ட் விதியைக் (Raoult's Law) கீழ்க்கண்டவாறு கூறலாம்:

'ஒரு கரைபொருளைச் சேர்ப்பதால் உண்டாகும் கரைப் பானின் ஒப்பு ஆவியழுத்தக் குறைவும் கரைபொருளின் மோல் பின்னமும் சமமாகும்.'

இவ் விதியைக் கணிதமுறையில் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்:

$n_1$, $n_2$ ஆகிய இரண்டும் முறையே கரைப்பான், கரை பொருள்களின் மோல் எண்களானால், மோல் பின்ன வரையறைப்படி

$$\text{கரைபொருளின் மோல் பின்னமான } X_2 = \frac{n_2}{n_1+n_2}$$

கணிதமுறையில் ரௌல்ட் விதியை எழுதினால்,

$$\frac{p^0 - p}{p^0} = \frac{n_2}{n_1 + n_2} \qquad (1)$$

ஆனல், மோல் எண்கள் = எடை / மூலக்கூறு எடை $= w/m$

(1) ஆவது சமன்பாட்டைக் கீழ்க்கண்டவாறு மாற்றி எழுதலாம்.

$$\frac{p^0 - p}{p^0} = \frac{w_1 \,/\, m_2}{w/m_1 + w/m_2} \qquad (2)$$

இச் சமன்பாட்டில் $w_2$, $w_1$ என்பவை முறையே கரைபொருள், கரைப்பான் ஆகியவற்றின் எடைகளை கிராமில் குறிக்கின்றன. $m_2$, $m_1$ ஆகியவை கரைபொருள், கரைப்பான் இவற்றின் மூலக் கூறு எடை எண்களாகும்.

மிக நீர்த்த கரைசலுக்கு, சமன்பாட்டில் கீழ்வரும் $w_2 / m_2$ஐ நீக்கிவிடலாம். பிறகு (2) ஆவது சமன்பாட்டைப் பின்கண்ட வாறு எழுதலாம்:

$$\frac{p^0 - p}{p} = \frac{w_2/m_2}{w_1/m_1} = \frac{w_2 m_1}{m_2 w_1}$$

ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் கரைசல், கரைப்பான் ஆகிய இரண்டின் ஆவியமுத்தங்கள் கரைப்பான், கரைபொருள் இவற்றின் எடைகள், மற்றும் கரைப்பானின் மூலக்கூறு எடை எண் இவை தெரிந்திருந்தால், கரைபொருளின் மூலக்கூறு எடை எண்ணைக் கணக்கிடலாம்.

**கணக்கு 1**

13 கிராம் கரைபொருளை 100 கிராம் கரைப்பானில் (நீரில்) கரைந்திருக்கும் கரைசலின் ஆவியமுத்தம் 28°C வெப்பநிலையில் 27·371 மி.மீ. ஆகும். இவ் வெப்பநிலையில் நீரின் அழுத்தம் 28·065 மி.மீ. ஆகும். கரைபொருளின் மூலக்கூறு எடையைக் கணக்கிடுக.

$$\frac{p^0 - p}{p^0} = \frac{w_2 m_1}{w_1 m_2}$$

$p^0 = 28{\cdot}065$ மி.மீ.

$p = 27.371$ மி.மீ.

$w_1 = 100$ கி.

$m_1 = 18$ (நீர்)

$m_2 = ?$

$w_2 = 13$ கி.

$$\frac{28{\cdot}065 = 27{\cdot}371}{28{\cdot}065} = \frac{13 + 18}{100 \times m_2}$$

$$m_2 = \frac{13 \times 18 \times 28{\cdot}065}{0{\cdot}694 \times 100} = 94.6 \text{ கி.}$$

∴ கரைபொருளின் மூலக்கூறு எடை = 94·6 கி.

**கொதிநிலை உயர்வு (Elevation of Boiling point)**

ஒரு நீர்மத்தின் ஆவியமுத்தம் வெளிக்காற்றின் அழுத்தத்திற்குச் சமமாயிருக்கும்போது அந்த நீர்மம் கொதிக்கிறது. ஆவியாகாத கரைபொருளை ஒரு கரைப்பானில் கரைக்கும்போது கரைப்பானில் ஆவியமுத்தம் குறைகிறது. இதனால் கரைசல் உயர்ந்த

வெப்பநிலையிலிருக்கும்போதுதான் அதன் ஆவி அழுத்தம், வெளிக்காற்றின் அழுத்தத்திற்குச் சமமாகிறது. எனவே, ஒரு குறிப்பிட்ட அழுத்தத்தில் ஒரு கரைசலின் கொதிநிலை, கரைப்பானின் கொதிநிலையைவிட அதிகமாயுள்ளது. ஒரே அழுத்தத்தில் கரைசலின் கொதிநிலைக்கும், கரைப்பானின் கொதிநிலைக்கும் உள்ள வித்தியாசம் கொதிநிலை உயர்வு எனப்படுகிறது.

கொதிநிலை உயர்வு $\triangle T_0$ = கரைசலின் கொதிநிலை — கரைப்பானின் கொதிநிலை.

ஒரு கரைசலில் ஏற்படும் கொதிநிலை உயர்வு, அக் கரைசலின் மொலாலிட்டிக்கு நேர்விகிதத்தில் மாறுகிறது. மேலும் கொதிநிலை உயர்வு கரைபொருளின் தன்மையைப் பொறுத்ததன்று. வெவ்வேறு பொருள்கள் ஒரே கரைப்பானில் கரைந்து உண்டாகும் சம மொலாலிட்டி உள்ள கரைசல்களின் கொதிநிலை உயர்வு சமமாக உள்ளது. அதாவது, அவ்விதக் கரைசல்களின் கொதிநிலைகள் சமமாயுள்ளன. 1000 கிராம் கரைப்பானில் ஒரு மோல் அளவுள்ள எந்தக் கரைபொருள் கரைந்திருந்தாலும், அது ஒரே அளவுள்ள கொதிநிலை உயர்வைத் தரும். இது கரைபொருளின் தன்மையைச் சார்ந்திராது. இம் மாறிலிக்கு மோலால் கொதிநிலை மாறிலி அல்லது எபுலியாஸ்கோபிக் மாறிலி (Molal boiling point constant or ebullioscopic constant) எனப் பெயர். நீருக்கு இம் மாறிலியின் மதிப்பு 0·52 ஆகும். அதாவது 1 கிராம் மூலக்கூறு எடையுள்ள (1 மோல்) கரைபொருள் (சான்றாக 60கிராம் யூரியா, 180 கிராம் குளுகோஸ், 342 கிராம் சர்க்கரை) 1000 கிராம் நீரில் கரைந்து உண்டாகும் கரைசல் 100·52° வெப்பநிலையில் கொதிக்கிறது. கொதிநிலை உயர்வு 0·52°C ஆகும். மோலால் கொதிநிலை மாறிலி $K_b$ என்று குறிக்கப்படுகிறது.

கரைப்பானின் $K_b$-ன் மதிப்பையும், தெரிந்த அடர்வுள்ள கரைசலின் கொதிநிலையையும் அறிந்திருந்தால் கரைபொருளின் மூலக்கூறு எடையைக் கணக்கிடலாம். கொதிநிலை உயர்வை பெக்மன் வெப்பமானியைக்கொண்டு (Beckmann thermometer) கணக்கிடலாம். இவ் வெப்பமானியைக்கொண்டு 0.01° வெப்பநிலையை அளக்கலாம். பெக்மன் வெப்பமானி கரைப்பான் அல்லது கரைசலின் சரியான கொதிநிலையைக் கண்டுபிடிக்க முடியாது. ஆனால், இவை இரண்டின் கொதிநிலைகளுக்கு இடையே உள்ள வித்தியாசத்தை 0·01°C-க்குத் துல்லியமாகக் காணலாம். இம் மதிப்புகளைக்கொண்டு பொருள்களின் மூலக்கூறு எடைகளைக் கணக்கிட முடியும்.

**கணக்கு**

55·6 கிராம் அசிட்டோனில் 2·78 கிராம் பென்சோஃபினோன் சேர்மத்தைக் கரைத்து உண்டான கரைசலின் கொதிநிலை உயர்வு 0·472° ஆகும். பென்சோஃபினோனின் மூலக்கூறு எடையைக் கணக்கிடுக. அசிட்டோனின் கொதிநிலை உயர்வு மாறிலி 1·72 ஆகும்.

பென்சோஃபினோனின் மூலக்கூறு எடை = $M$ என்க.

1000 கிராம் அசிட்டோனில் $M$ கிராம் பென்சோஃபினோனைக் கரைத்து உண்டான உயர்வு $\Big\} = 1{\cdot}72°C$

1000 கிராம் அசிட்டோனில் 2·78 கி.பென்சோஃபினோனைக் கரைக்கும்போது உயர்வு $\Big\} = \frac{1{\cdot}72}{M} \times 2{\cdot}78$

2·78 கிராம் பென்சோஃபினோன் 55·6 கி. அசிட்டோனில் கரைந்தால் உண்டாகும் உயர்வு $\Big\} = \frac{1{\cdot}72 \times 2{\cdot}78 \times 1000}{M \times 55{\cdot}6}$

இங்குக் கணக்ிடப்பட்ட உயர்வு $= 0{\cdot}472$

$$0{\cdot}472 = \frac{1{\cdot}72 \times 2{\cdot}78 \times 1000}{M \times 55{\cdot}6}$$

$$M = \frac{1{\cdot}72 \times 2{\cdot}78 \times 1000}{55{\cdot}6 \times 0{\cdot}472} = 182{\cdot}2$$

பென்சோஃபினோனின் மூலக்கூறு எடை = 182·2

**உறைநிலைத் தாழ்வு** (Depression of freezing point)

ஒரு நீர்மத்தின் உறைநிலையில் திண்ம, நீர்ம நிலைகள் சம நிலையிலிருக்கின்றன. இதனால், இவற்றின் ஆவியழுத்தங்கள் சமமாக இருக்கும். ஆவியாகாத கரைபொருளைக் கரைப்பானில் கரைத்ததனாலுண்டாகும் ஆவியழுத்தக் குறைவு கரைசலின் உறைநிலையைக் குறைக்கிறது. இதனால், அதே அழுத்தத்தில் கரைசல், கரைப்பானின் உறைநிலையைவிடத் தாழ்ந்த வெப்பநிலையில் உறையும். இதற்குக் கரைசலின் உறைநிலைத் தாழ்வு என்று பெயர்.

கொதிநிலை உயர்வைப் போலவே உறைநிலைத் தாழ்வும் கீழ்க் கண்ட விதிகளுக்கு உட்படுகிறது: (1) ஓர் ஆவியாகாத கரை

பொருளைக் கரைப்பானில் சேர்த்தால் உண்டாகும் உறைநிலைத் தாழ்வு, கரைசலின் அடர்வுக்கு நேர்விகித சமமாயிருக்கிறது. (2) ஒரு குறிப்பிட்ட எடையுள்ள கரைப்பானில் கரைந்துள்ள பல கரைபொருளின் மோல் எண்கள் சமமாக இருந்தால், இக் கரைசல்களின் உறைநிலை சமமாக இருக்கும்.

1000 கிராம் கரைப்பானில் 1 கிராம் மூலக்கூறு எடை உள்ள கரைபொருள் கரைந்து உண்டாகும் கரைசலில், கரைப்பானின் உறைநிலைத் தாழ்வு ஒரு மாறிலியாக உள்ளது. 1 மோலால் அடர்வுள்ள இக் கரைசலுக்கு, இதன் மதிப்புக் கரைப்பானின் தன்மையைச் சார்ந்து உள்ளது. ஒரு கரைப்பானுக்குள்ள இம் மாறிலி மோலால் தாழ்வு மாறிலி (Molal depression constant) அல்லது க்ரியாஸ்கோபிக் மாறிலி (cryoscopic constant) என்றும் வழங்கப்படுகிறது. இதை $K_f$ என்று குறிக்கிறோம். நீரின் மாறிலி 1·86 ஆகும். அதாவது, ஒரு மோல் எடையுள்ள கரைபொருளை (சான்றாக 60 கிராம் யூரியா, 180 கி.க்ளூகோஸ்) 1000 கிராம் நீரில் கொண்டுள்ள, நீர்க்கரைசல் — 1·86°C வெப்ப நிலையில் உறைகிறது. உறைநிலைத் தாழ்வு 1·86°C என்பதைக் காட்டுகிறது.

கரைப்பானின் $K_f$-ன் மதிப்பு, உறைநிலைத் தாழ்வு, கரைசலின் அடர்வு ஆகியவற்றைக் கண்டறிந்தால், கரைபொருளின் மூலக் கூறு எடை எண்ணைக் கணக்கிட முடியும். 0·01°C-க்குத் துல்லியமாக வெப்பநிலை காண உதவும் பெக்மன் வெப்ப மானியையே உறைநிலைத் தாழ்வு காணும் சோதனைகளிலும் பயன்படுத்துகிறோம். கொதிநிலை உயர்வு முறையில் கண்டது போலவே, உறைநிலைத் தாழ்வுமுறையிலும் பொருள்களின் மூலக்கூறு எடை எண்களைக் கண்டுபிடிக்கலாம்.

1000 கிராம் எடையுள்ள சில கரைப்பான்களின் $K_b$, $K_f$ ஆகியவற்றின் மதிப்புகளைக் கீழ்க்கண்ட அட்டவணை காட்டுகிறது.

| கரைப்பான் | $K_b$ | $K_f$ |
|---|---|---|
| நீர் | 0·52 | 1·86 |
| பென்சீன் | 2·67 | 5·12 |
| அசிடிக் அமிலம் | 3·14 | 3·90 |

சில கணக்கீடுகளில் K-ன் மதிப்பு 100 கிராம் கரைப்பானுக்குக் கொடுக்கப்படுகிறது. அவற்றின் K-ன் மதிப்பு முன்பக்க அட்டவணையில் உள்ளதுபோல் 10 மடங்கு அதிகமாக இருக்கும்.

கொதிநிலை உயர்வுமுறை, உறைநிலைத் தாழ்வுமுறை ஆகியவற்றில் கொடுக்கப்படும் கணக்குகளைக் கீழ்க்கண்ட சமன்பாட்டை உபயோகித்துத் தீர்வு காணலாம்.

$$m_2 = \frac{1000\ Kw_2}{\Delta\ Tw_1}$$

இச் சமன்பாட்டில் K க்ரியாஸ்கோபிக் அல்லது எபுலியாஸ்கோபிக் மாறிலியையும், $W_2$ கரைபொருளின் எடையையும், $\Delta T$ கொதிநிலை உயர்வு அல்லது உறைநிலைத் தாழ்வையும், $W_1$-கரைப்பானின் எடையையும், $m_2$ கரைபொருளின் மூலக்கூறெடை எண் ஆகியவற்றையும் குறிக்கின்றன.

**கணக்கு**

50 கிராம் நீரில் கரையும் 5 கிராம் கரைபொருள், நீரின் உறைநிலையை 1·2°C குறைத்தது. கரைபொருளின் மூலக்கூறு எடை எண்ணைக் கணக்கிடுக. (நீரின் $K_f$-ன் மதிப்பு 1000 கிராமுக்கு 1·86)

$$m_2 = \frac{1000\ K_f\ w_2}{\Delta\ T\ w_1}$$

$w_2$ = கரைபொருளின் எடை = 5 கிராம்

$w_1$ = கரைப்பானின் எடை = 50 கிராம்

$\Delta T$ = உறைநிலைக் குறைவு = 1·2°C

$K_f$ = உறைநிலை மாறிலி = 1·86

$m_2$ = கரைபொருளின் மூலக்கூறு எடை = ?

$$m_2 = \frac{1000 \times 1{\cdot}86 \times 5}{50 \times 1{\cdot}2} = \underline{154{\cdot}2}$$

கரைபொருளின் மூலக்கூறு எடை = 154.2

**கரைசல்களில் மின்பகு பொருள்களின் மூலக்கூறு எடைகள்**

ஆவியழுத்தக் குறைவு, கொதிநிலை உயர்வு, உறைநிலைத் தாழ்வு ஆகிய பண்புகள் கரைசலிலுள்ள கூறுகளின் எண்ணிக்கையைப் பொறுத்திருக்குமேயன்றி, அவற்றின் தன்மையைச் சார்ந்திரா. யூரியா, கரும்புச் சர்க்கரை போன்ற மின்கடத்தாப் பொருள்களின் கரைசல்களில் உள்ள கூறுகள் மூலக் கூறுகளாகவே உள்ளன. அமிலங்கள், காரங்கள், உப்புகள் போன்ற மின்பகு பொருள்கள் கரைசல்களில் அயனிகளாகப் பிரிகின்றன. இதனால், கரைசலிலுள்ள துகள்களின் எண்ணிக்கை அதிகமாகிறது. இதன் விளைவால், மேலே குறிப்பிட்ட மூன்று பண்புகளிலும் அதிகரிப்பு ஏற்படுகிறது. எனவே, ஆய்வு முறையில் கண்டறிந்த, மின்பகு பொருளின் மூலக்கூறு எடை, அதன் இயல்பான மதிப்பிற்குக் குறைந்தே உள்ளது. மூலக்கூறுகளின் இணக்கம் (molecular association) உண்டாகும் கரைசல்களில் ஆய்வு முறையில் காணும் மூலக்கூறெடை அதிகமாயிருக்கிறது.

ஒரு பொருளின் இயல்பான மூலக்கூறு எடைக்கும், பரிசோதனையின் மூலம் கண்டறிந்த மூலக்கூறெடைக்கும் உள்ள விகிதம் வான்ட்ஹாஃப் எண் (Vant Hoff's factor) $i$, எனப் படுகிறது. இது மின்பகு பொருளின் பிரிகை வீதத்தைக் காட்டுகிறது.

## வினாக்கள்

1. ஒரு கரைப்பானின் கொதிநிலை உயர்வு என்பது யாது? 0·5143 கிராம் ஆந்த்ரசீனை 35 கிராம் குளோரோஃபார்மில் கரைக்கும்போது, குளோரோஃபார்மின் கொதிநிலை 0·323° அளவுக்கு அதிகரிக்கிறது. ஆந்த்ரசீனின் மூலக்கூறு எடையைக் கணக்கிடுக. ($K_b = 0{\cdot}39$)

2. ரௌல்ட் விதியைக் கூறு. ஒரு கரைபொருளின் மூலக்கூறு எடையைக் காண இவ் விதி எவ்வாறு பயன்படுகிறது?

3. ஒரு கரைப்பானின் உறைநிலைத் தாழ்வு என்றால் என்ன?

4. 22·2 கிராம் பென்சீனில் 0·440 கிராம் கரைபொருளைக் கரைத்து உண்டாகும் கரைசலின் உறைநிலைத் தாழ்வு 0·567° ஆகும். கரைபொருளின் மூலக்கூறெடையைக் கண்டுபிடி. ($K_f = 5{\cdot}12$)

# 7. அமில, கார அயனி வலிவுகள்
## (Strengths of Acids and Bases)

அமிலங்கள் புரோட்டான்களை வழங்குகின்றன என்றும், புரோட்டான்களை ஏற்கும் பொருள் காரம் எனவும் லவ்ரிபிரான்ஸ்டெட் கொள்கை விளக்குகிறது. எனவே, ஓர் அமிலத்தின் வலிமை அது புரோட்டானை அளிக்கும் திறனைக்கொண்டு கண்டறியப்படுகிறது. அமிலங்கள் நீரில் கரையும்போது ஹைட்ரஜன் அயனி அல்லது புரோட்டான் $H^+$ உண்டாகிறது. ஆதலால், அமிலங்கள் அயனிகளாகப் பிரிகை புரியும் திறனைக் கொண்டும் அவற்றின் வலிமையினை நிர்ணயிக்கலாம். இவ்வாறு புரோட்டான்களை அளிக்கும் திறனில் அமிலங்கள் வேறுபட்டு விளங்குகின்றன. ஹைட்ரோகுளோரிக் அமிலம், சல்ஃபூரிக் அமிலம், நைட்ரிக் அமிலம் ஆகியவை அதிக அளவில் அயனிகளாகப் பிரிகின்றன. ஹைட்ரோசயனிக் அமிலம், அசிடிக் அமிலம் போன்றவை குறைந்த அளவில் அயனிகளாகப் பிரிகின்றன. அமிலம் அதிக அளவில் அயனிகளாகப் பிரிந்தால் அது அதிக அளவில் $H^+$ அயனிகளைப் பெற்றிருக்கும். அமிலத்தின் அயனி வலிவு என்பது அது பெற்றுள்ள $H^+$ அயனிகளின் அடர்வைக் குறிப்பதாகும். அமிலத்தில் $H^+$ அயனிகள் எந்த அளவிற்கு அதிகம் இருக்கிறதோ அந்த அளவிற்கு அதன் அயனி வலிவு அதிகம் எனப் பொருள்படும்.

அமிலத்தின் அயனி வலிவுதான் அதன் வீரியத்தன்மைக்குக் காரணம் ஆகும். எனவேதான், அதிக அளவில் அயனிகளாகப் பிரியும் அமிலங்களை வீரிய அமிலங்கள் (strong acids) என்றும், குறைந்த அளவில் அயனிகளாகப் பிரியும் அமிலங்களை வீரியமற்ற அமிலங்கள் என்றும் கூறுகிறோம். ஹைட்ரோகுளோரிக் அமிலம், சல்ஃபூரிக் அமிலம் ஆகியவை எல்லா அடர்வுகளிலும், நீர்க் கரைசல்களில் முழுவதும் அயனிகளாகப் பிரிகின்றன. எனவே, இவை வீரியமிக்க அமிலங்களாகும். ஹைட்ரோ

சயனிக் அமிலம், அசிடிக் அமிலம் ஆகியவை நீர்க்கரைசல்களில் குறைந்த அளவே அயனிகளாகப் பிரிகின்றன. எனவே, இவை வலி குறை அமிலங்கள் (weak acids) எனப்படுகின்றன.

**நடுநிலையாக்கல் வினைகள் (Neutralisation)**

ஓர் அமிலம், காரம் இவையிரண்டிற்கும் இடையே நிகழும் வினைகள் நடுநிலையாக்கல் வினைகள் எனப்படுகின்றன. இவ் வினைகளின்போது ஓர் உப்பும் நீரும் உண்டாகின்றன. அமிலம் காரத்தாலும், காரம் அமிலத்தினாலும் நடுநிலையாக்கப் படுகிறது. HCl, NaOH இவையிரண்டும் செயல்படும் வினையை எடுத்துக்கொள்வோம். இவை யிரண்டும் வலிமிகுந்த சேர் மங்கள். அதனால் இவை முழுவதும் அயனிகளாக உள்ளன. உண்டாகும் வினைப்பொருளான சோடியம் குளோரைடும் வலி மிக்க மின்பகு பொருளாதலால், இதுவும் முழுதும் அயனி களாகவே உள்ளது.



$$H^+ + Cl^- + Na^+ + OH^- \longrightarrow H_2O + Na^+ + Cl^-$$

நீர் அநேகமாகப் பிரிகைபுரியாத நிலையில்தானிருக்கிறது. இரு பக்கங்களிலுமுள்ள பொதுவான சேர்மங்கள் அல்லது அயனிகளை நீக்கிவிடலாம். மொத்த வினை :



$$H^+ + OH^- \longrightarrow H_2O$$

இதே முறையில் பொட்டாசியம் ஹைட்ராக்சைடும், நைட்ரிக் அமிலமும் வினைபட்டு உப்பையும் நீரையும் தருகின்றன.



$$H^+ + NO_3^- + K^+ + OH^- \longrightarrow K^+ + NO_3^- + H_2O$$



$$H^+ + OH^- \longrightarrow H_2O$$

எனவே, நடுநிலையாக்கல் வினை என்பது அமிலத்திலிருந்து உண்டான ஹைட்ரஜன் அயனியும், காரத்திலிருந்து உண்டான $OH^-$ அயனியும் வினைபடுவதாகும். இவ்விரண்டு அயனிகளும் வினைபட்டு, பிரிகை புரியாத நீர் மூலக்கூறு உண்டாகிறது.

## ஹைட்ரஜன் அயனி அடர்வு
## (Hydrogen Ion Concentration)

ஒரு கரைசல் வீரியமான அமிலம் அல்லது வீரியம் குறைந்த காரம் எனப் பெருவாரியாகக் கூறுவதற்குப் பதிலாக, அதன் அமிலத்தன்மை அல்லது காரத்தன்மையைச் சரியாகக் கூற ஓர்

அளவுகோல் பயன்படுத்தப்படுகிறது. கீழ்க்கண்ட முறை இதற்குப் பெரிதும் உதவுகிறது.

நீர் மிகக் குறைந்த அளவே பிரிகையடைந்து ஹைட்ரஜன் அயனியையும், ஹைட்ராக்சில் அயனியையும் தருகிறது.



$$H_2O \rightleftharpoons H^+ + OH^-$$

ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் சமநிலை ஏற்படும் பொழுது நிறைதாக்க விதியின்படி சமநிலை மாறிலியைக் கீழ்க்கண்டவாறு கணக்கிடலாம்.

$$K = \frac{[H^+]\,[OH^-]}{[H_2O]}$$

இச் சமன்பாட்டில் $[H^+]$, $[OH^-]$, $[H_2O]$ ஆகியவை வினையில் பங்குபெறும் பொருள்களின் மூலக்கூறு அடர்வுகளைக் குறிக்கின்றன. நீரின் பிரிகை விதம் மிகக் குறைவாக உள்ளதால் நீரின் அடர்வை ஒரு மாறிலி எனவே கருதலாம்.

$$\therefore K_w = K\,[H_2O] = [H^+]\,[OH^-]$$

இங்கு $K_w$ என்பது நீரின் அயனிப்பெருக்கம் [Ionic product of water] எனப்படுகிறது. நீரில் உள்ள ஹைட்ரஜன் அயனி, ஹைட்ராக்சில் அயனி இவற்றின் அடர்வுகளின் பெருக்குத் தொகை நீரின் அயனிப் பெருக்கத்திற்குச் சமம் என அறியப் படுகிறது.

$$K_w = [H^+]\,[OH^-]$$

சாதாரண வெப்பநிலையில் (25°C) $K_w$-ன் மதிப்பு $10^{-14}$ ஆகும். $[H^+]$, $[OH^-]$ ஆகியவற்றின் அடர்வுகளைக் கிராம்-அயனிகள்/ லிட்டர் என்ற அலகால் குறிப்பிடும்போது இதன் மதிப்பு $= 1 \times 10^{-14}$ ஆகும்.

$$K_w = [H^+]\,[OH^-] = 1 \times 10^{-14}$$

இம் மதிப்பு வெப்பநிலை உயர்வுடன் அதிகரிக்கிறது. நீரின் ஒவ்வொரு மூலக்கூறும் ஒரு ஹைட்டிரஜன் அயனியையும், ஒரு

ஹைட்ராக்சில் அயனியையும் உண்டாக்குகிறது. எனவே, $[H^+]$, $[OH^-]$ இவற்றின் அடர்வுகள் சமமாக இருக்கவேண்டும். தூய நீரில் (அல்லது நடுநிலைக் கரைசலில்),

$[H^+] = 1 \times 10^{-7}$ கிராம்—அயனி/லிட்டர்

$[OH^-] = 1 \times 10^{-7}$ கிராம்—அயனி/லிட்டர்

எந்தக் கரைசலிலும் $[H^+]$, $[OH^-]$-ஆகியவற்றின் பெருக்குத் தொகை 25°C-ல் $10^{-14}$ என்ற மாருத மதிப்பைப் பெற்றிருக்க வேண்டும். இது $K_w$-ன் மதிப்பாகும்.

ஒரு கரைசலில் $H^+$ அயனியின் அடர்வு $1 \times 10^{-7}$ ஐ விட அதிகமாக இருப்பின், கரைசல் அமிலத்தன்மையைப் பெற்றிருக்கிறது என்பது பொருள். இதனுல் இக் கரைசல்களில் $K_w$-ன் மதிப்பை மாருமல் வைத்திருப்பதற்கு $OH^-$-ன் அடர்வு குறைவாக இருக்க வேண்டும். $H^+$ அயனியின் அடர்வு $1 \times 10^{-7}$ ஐ விடக் குறைவாக இருப்பின், கரைசல் காரத்தன்மையைப் பெற்றிருக்கிறது என அறிகிருேம். இக் கரைசல்களில் $[OH^-]$ அதிக மதிப்பைப் பெற்றுள்ளது. ஆனுல், இருவகைக் கரைசல்களிலும் $K_w$-ன் மதிப்பு $10^{-14}$ ஆகத்தான் இருக்கும். ஒரு கரைசலில் உள்ள $H^+$ அயனியின் அடர்வைக்கொண்டே, அது அமிலத்தன்மையுடன் இருக்கிறதா அல்லது காரத்தன்மையுடன் இருக்கிறதா எனக் கூறலாம்.

ஒரு கரைசலில் உள்ள $H^+$ அயனியின் அடர்வு எவ்வளவு என்பதை எளிய முறையில் தெரிவிக்க சொரன்சென் (Sorensen) என்ற விஞ்ஞானி $PH$ என்ற ஒரு மதிப்பைப் பயன்படுத்திஞர். இதற்கும் $H^+$ அயனியின் அடர்வுக்கும் உள்ள தொடர்பைப் பின்வருமாறு காட்டலாம்.

$$P_H = -\log_{10} [H^+] = \log_{10} \frac{1}{[H^+]}$$

'கரைசலில், ஹைட்ரஜன் அயனியின் கிராம் அயனி/லிட்டர் அளவிலுள்ள அடர்வினுடைய 10 ஐ அடிப்படையாகக் கொண்ட மடக்கையின் (logarithm) எதிர்மறை எண் $P_H$ என்று குறிக்கப்படும்.'

நீர் அல்லது நடுநிலைக் கரைசலில், $[H^+] = 1 \times 10^{-7}$ கி. அயனி/லி.

∴ இதன் $PH = -\log 1 \times 10^{-7} = ?$

ஒரு கரைசலில் $[H^+] = 1 \times 10^{-3}$ என்றால் $PH = 3$. இக் கரைசல் அமிலத்தன்மையது.

ஒரு கரைசலில் $[H^+] = 1 \times 10^{-12}$ என்றால் $PH = 12$. இக் கரைசல் காரத்தன்மை வாய்ந்தது.

கீழ்க்காணும் அட்டவணை அமிலக் கரைசல்கள், காரக் கரைசல்கள் ஆகியவற்றின் $[H^+]$-ன் மதிப்பையும், அவை ஒவ்வொன்றுக்குமுள்ள $PH$-ன் மதிப்பையும் விளக்குகிறது.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| அமிலக் கரைசல்கள் | $[H^+] \rightarrow 10^{+0}$ ஒரு மோலார்) | $10^{-1}$ | $10^{-2}$ | $10^{-3}$ | $10^{-4}$ | $10^{-5}$ | $10^{-6}$ |
| | $PH \longrightarrow 0$ | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| காரக் கரைசல்கள் | $[H^+] \longrightarrow 10^{-8}$ | $10^{-9}$ | $10^{-10}$ | $10^{-11}$ | $10^{-12}$ | $10^{-13}$ | $10^{-14}$ |
| | $PH \longrightarrow 8$ | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |

எனவே, ஒரு கரைசலுக்கு $PH$-ன் மதிப்பு 7 ஐ விடக் குறைவாக இருப்பின், அது அமிலத்துடன் இருக்கும் என்றும், $PH$-ன் மதிப்பு 7 ஐ விட அதிகமாக இருப்பின், அது காரத் தன்மையுடன் இருக்கும் என்றும் அறிகிறோம்.

**கணக்கு**

1. கீழ்க்கண்ட செறிவுள்ள அமிலங்கள், காரங்களில் ஹைட்ரஜன் அயனி, ஹைட்ராக்சில் அயனி ஆகியவற்றின் அடர்வுகளைக் கணக்கிடுக.

(i) 1N HCl ; (ii) 0·01N HCl ; (iii) 0·1N NaOH.

(i) 1N HCl : 1N HCl கரைசலில் $[H^+] = 1$

$$K_w = 10^{-14} = [H^+] \times [OH^-]$$

$$= 1 \times [OH^-]$$

$\therefore [H^+] = 1$கிராம் அயனி/லிட்டர்; $[OH^-] = 10^{-14}$ கி. அ./லி

(ii) 0·01N HCl : இக் கரைசலில்

$[H^+] = 0{\cdot}01 = 1 \times 10^{-2}$ கி.அ./லி.

$Kw = 10^{-14} = [H^+] \times OH^-]$
$= 10^{-14} = 10^{-2} \times [OH^-]$
$[OH^- = 10^{-14}/10^{-2} = 10^{-12}]$ கி. அ/லி.
(iii) 0·1N NaOH : $[OH^-] = 0\text{-}1 = 10^{-1}]$ கி. அ/லி.
$[H^+] = 10^{-14}/10^{-1} = 10^{-13}$ கி. அ/லி.

2. கீழ்க்கண்ட கரைசல்களின் *PH* மதிப்புகளைக் கணக்கிடுக :

(i) 1N HCl : $[H^+] = 1; PH = -\log_{10} [H^+] = 0 - \log_{10} [1]$

(ii) 0·1N HCl ; $[H^+] = 0{\cdot}01 = 10^{-2}$
$PH = -\log_{10} [10^{-2}] = 2$

(iii) 0·1N NaO H $= [H^+] = 10^{-13}$ ;
$PH = -\log_{10} [10^{-13}] = 13.$

## வினாக்கள்

1. கீழ்க்கண்டவற்றை விளக்குக :

(a) நடுநிலையாக்கல் வினை. (b) வலிமிகு, வலிகுறை அமிலம்

2. *PH* என்றால் என்ன ? விளக்குக. நீரின் அயனிப் பெருக்கத்தைப்பற்றிச் சிறுகுறிப்பு வரைக.

3. கீழ்க்கண்ட செறிவுள்ள கரைசல்களின் ஹைட்ரஜன், ஹைட்ராக்சில் அயனிகளின் அடர்வுகளையும், அக் கரைசல்களின் *PH* மதிப்புகளையும் கணக்கிடுக.

(i) 0·1N HCl ; (ii) 0·001N HCl; (iii) N NaOH ; (iv) 0·0 1N NaOH.

# 8. ஆக்ஸிஜனேற்ற எண்கள்

## (Oxidation Numbers)

ஆக்ஸிஜனேற்றம், ஒடுக்கம் ஆகிய வினைகளை விளக்க ஆக்ஸிஜனேற்ற எண்கள் பெரிதும் பயனுகின்றன. ஆக்ஸிஜனேற்ற எண்கள், எல்லா அணுக்கள், தனிம நிலையில் உள்ளவை, சேர்மநிலைகளில் உள்ளவை, சமவலுப் பிணைப்புக் கொண்டவை, அயனிப்பிணைப்புக் கொண்டவை ஆகிய எல்லாவகைப் பொருள்களுக்கும் அளிக்கப்படக்கூடிய பொதுவான கோட்பாடு ஆகும்.

ஒரு தனிமத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் என்பது அதன் இணைதிறனையும், மின்தன்மையையும் குறிக்கும் எண்ணுகும். ஒரு தனிமத்தின் அணு, வேதிக் கூடுகையில் பங்கு பெறும் போது அது இழக்கும் அல்லது ஏற்கும் எலெக்ட்ரான்களின் எண்ணிக்கையே அதன் இணைதிறனுகும். சோடியம் குளோரினுடன் சேரும்போது ஓர் எலெக்ட்ரானை இழக்கிறது. குளோரின் ஓர் எலெக்ட்ரானை ஏற்றுக்கொள்கிறது. எனவே, சோடியத்தின் இணைதிறன் = 1. சோடியம் அணு ஓர் எலெக்ட்ரானை இழப்பதால் ($Na^+$) ஒரு நேர்மின் தன்மையைக் கொண்ட ஒரு சோடியம் அயனி உண்டாகிறது. எனவே, சோடியத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் = + 1. குளோரின் ஓர் எலெக்ட்ரானைப் பெறுவதால் இதன் இணைதிறன் = 1. ஓர் எலெக்ட்ரான் இதில் அதிகமாவதால் ஓர் அலகு எதிர்மின் தன்மையைக் கொண்ட குளோரைடு அயனி ($Cl^-$) கிடைக்கிறது. எனவே, குளோரினின் ஆக்ஸிஜனேற்ற எண் = 1.

மக்னீசியம் ஆக்ஸைடில் (MgO) மக்னீசியம் இரண்டு எலெக்ட்ரான்களை இழக்கிறது. இதனுல் இதன் இணைதிறன் = 2. மக்னீசியத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் = + 2. ஆக்ஸிஜன் இரண்டு எலெக்ட்ரான்களை ஏற்கிறது. இதன் இணைதிறன் = 2. ஆக்ஸிஜனேற்ற எண் = — 2.

எனவே, ஒரு தனிமத்தின் இணை திறனையும் மின் தன்மையையும் ஒருங்கே குறித்துக் காட்டுவதுதான் ஆக்ஸிஜனேற்ற எண்ணாகும்.

**ஆக்ஸிஜனேற்ற எண்ணை நிர்ணயித்தல்**

கீழ்க்கண்ட விதிகளின் அடிப்படையில் ஒரு சேர்மத்திலுள்ள ஒரு தனிமத்தின் ஆக்ஸிஜனேற்ற எண்ணை நிர்ணயிக்கலாம்.

(1) எந்தத் தனிமத்துடனும் கூடாது தனித்த நிலையில் (free state) உள்ள தனிமத்தின் (உலோகம் அல்லது அலோகம்) ஆக்ஸிஜனேற்ற எண் பூஜ்யமாகும். சான்றாக Cl, $Cl_2$ இவற்றின் ஆக்ஸிஜனேற்ற எண் பூஜ்யமாகும்.

(2) எளிய ஓரணு அயனியின் ஆக்ஸிஜனேற்ற எண் அதன் மின்னேற்றத்திற்குச் சமமாகும். பல அணுக்களைக்கொண்ட அயனியின் மின்னேற்றமும், அதிலுள்ள அணுக்களின் மொத்த ஆக்ஸிஜனேற்ற எண்களும் சமம். $Cl^-$ (—1) ; $Br^-$ (—1) ; $O^{--}$ (—2) ; $Fe^{+++}$ (+3).

(3) ஹைட்ரஜனும் உலோகங்களும் நேர்மின் இணை திறனைப் (positive valency) பெற்றுள்ளன. ஹைட்ரஜன் அதனுடைய சேர்மங்களில் பெற்றுள்ள ஆக்ஸிஜனேற்ற எண் + 1 ஆகும். $Na^+$ (+ 1) ; $Fe^{++}$ (+ 2) ; $K^+$ (+ 1) ; $H^+$(+ 1); $Al^{+3}$ (+ 3.)

(4) அலோகங்களும், அமில மூலங்களும் எதிர்மின் இணை திறனைப் பெற்றுள்ளன. ஆக்ஸிஜன் அதனுடைய சேர்மங்களில் பெற்றுள்ள ஆக்ஸிஜனேற்ற எண் — 2 ஆகும்.

(5) ஒரு சேர்மத்தின் வாய்பாட்டிலுள்ள அணுக்களினுடைய ஆக்ஸிஜனேற்ற எண்களின் கூட்டுத்தொகை பூஜ்யமாகும். சான்றாக சோடியம் குளோரைடு சேர்மத்தில் ஆக்ஸிஜனேற்ற எண்களின் கூட்டுத்தொகை $Na^{+1} Cl^{-1} = 0$. நீர் : $2H^+ O^{-2} = 0$. ஃபெரஸ் சல்ஃபேட் : $Fe^{+2}$ $S^{+6}$ $O_4^{-8}$ அமோனியா : $N^{-3}H_3^{+3}$ ; அமோனியம் நைட்ரேட் : ($N^{-3}H_4^{+4}$ $N^{+5}O_3^{-6}$).

(6) சமவலுச் சேர்மங்களில் பிணைப்பிலுள்ள இரு எலெக்ட்ரான்கள் அதிக எலெக்ட்ரான் கவர்ஆற்றல் உள்ள தனிமத்தைச் சார்ந்துள்ளதாகக் கருதப்படுகின்றன. அதிக எலெக்ட்ரான்கள்

கவர்ஆற்றலுள்ள தனிமத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் எதிர்க் குறியையும், அதிக எலெக்ட்ரோ - பாஸிடிவ் அல்லது நேர்மின் தன்மையுள்ள தனிமத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் நேர்க் குறியையும் தாங்கியுள்ளன. சான்றாக ஹைட்ரஜன் குளோரைடு வாயு ஒரு சமவலு மூலக்கூறு. இம் மூலக்கூறில் ஹைட்ரஜனுக்கு + 1, குளோரினுக்கு — 1 ஆகிய ஆக்ஸிஜனேற்ற எண்கள் வழங்கப்பட்டுள்ளன.

ஒரு சேர்மத்திலுள்ள ஒரு தனிமத்தின் அணுக்களின் ஆக்ஸிஜனேற்ற எண்களைக் கண்டறிய மேற்கண்ட விதிகள் மிக்க பயனுள்ளவையாகின்றன. சில சான்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

**சல்ஃபூரிக் அமிலத்தில் சல்ஃபரின் ஆக்ஸிஜனேற்ற எண் கணக்கிடுதல்**

சல்ஃபூரிக் அமிலம், $H_2SO_4$-ன் மொத்த ஆக்ஸிஜனேற்ற எண் = 0. இரண்டு ஹைட்ரஜன் அணுக்களின் ஆக்ஸிஜனேற்ற எண்கள் + 2. ஒவ்வோர் ஆக்ஸிஜனுக்கும் ஆக்ஸிஜனேற்ற எண் — 2. நான்கு ஆக்ஸிஜன் அணுக்களுக்கு மொத்த ஆக்ஸிஜனேற்ற எண் — 8. ஹைட்ரஜன், ஆக்ஸிஜன் அணுக்களின் மொத்த ஆக்ஸிஜனேற்ற எண் = — 6. ($-8+2=6$). இதனால் சல்ஃபரின் ஆக்ஸிஜனேற்ற எண் = + 6 எனவே, **சல்ஃபூரிக் அமிலத்தின் மொத்த ஆக்ஸிஜனேற்ற எண் பூஜ்ய** மாகும்.

**கணக்கு**

(1) பொட்டாசியம் பர்மாங்கனேட்டின் மாங்கனீசின் ஆக்ஸிஜனேற்ற எண்ணைக் கணக்கிடுக.

மாங்கனீசின் ஆக்ஸிஜனேற்ற எண் $+X$ எனக் கொள்வோம்

பொட்டாசியம் பெர்மாங்கனேட்டில் $K^{+1}Mn^{+x}O_4$ $4 \times (-2)$
$KMnO_4 = +1 + x - 8 = 0$

$$x = +7$$

எனவே, மாங்கனீசின் ஆக்ஸிஜனேற்ற எண் = $+7$

(2) பொட்டாசியம் டை குரோமேட்டில் குரோமியத்தின் ஆக்ஸிஜனேற்ற எண் யாது?

